# சிங்கை உலகம்மை சந்தவிருத்தம்

ஆசிரியர்
மாதவச் சிவஞான முனிவரின் சிறியதந்தையாகிய
**நமச்சிவாயக்கவிராயர்**

உரைவிளக்கம்
குன்றக்குடிஆதீனப் புலவர். தமிழாகரர்
**வித்துவான். க. கதிரேசன் எம்.ஏ; பிஎட்.**
பூவாளூர். 621 712. அலைபேசி 098651 93754

# தோரண வாயில்

இந்நூலாசிரியர் ஆகிய அருட்பெருங்கவிஞர் நமச்சிவாயக் கவிராயர், அகத்தியனார் எழுந்தருளிய பொதிகைமலையின் சாரலில் உள்ள; விக்கிரம சிங்கபுரம் என்றும் பாவநாசம் என்றும் வழங்கப்பெறும் ஊரினர். தந்தையார் பாவநாசத் தலபுராணஆசிரியராகிய முக்களாலிங்க முனிவர். இவர்புதல்வராகிய ஆனந்தக்கூத்தருக்கு இளையசகோதரர் நம் நமச்சிவாயக்கவிராயர். தண்டமிழ்ச் சாத்திரநூலாகிய சிவஞானபோதத்திற்குப் பேருரைஅருளிய ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகளின் சிறிய தந்தையார் நம்கவிராயர் என்பர்.

பாவநாசத் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமானை, அருள்தரு பாவநாசர் என்றும் அருள்தரு கல்யாண சுந்தரரென்றும், அம்மையை அருள்தரு உலகம்மை என்றும் அருள்தரு கல்யாணசுந்தரி என்றும் கவிராயர் தம்நூல்களில் குறிக்கிறார்.

பெரும்புலமை வாய்ந்த பரம்பரையில் தோன்றிய இவர் தமிழ்இலக்கியம், இலக்கணம், சாத்திரம், வடமொழி இலக்கியம், இலக்கணம் வேதாகமங்களில் பெரும்புலமையாளர்; இவற்றைத்தம்மாணாக்கர்க்கும் கற்பித்து மகிழ்ந்தவர். இல்லற நெறியினர். பாவநாசத்து அம்மை அருள்தரு உலகம்மையின் உபாசகர். நாடோறும் அருள்தரு உலகம்மையை இரவுக் காலப்பூசையில் வணங்கிமகிழும் கடைப்பிடியினர்.

அவ்வன்னையின் அருளுக்குப்பாத்திரமான இவர், திரும்பிவரும்போதும் அருட்பாடல்களைப் பாடிக்கொண்டே வரும்இயல்புடையவர். அவ்வன்னை இவரறியாவண்ணம் இவரது பாடல்களைக்கேட்டுக் கொண்டே வருவாராம். ஒருநாள் இரவுவழிபாட்டிற்குப்பின் தாம்பூலம் தரித்துப்பாடிக்கொண்டே வரும்போது தாம்பூலஎச்சிலை துப்பியபோது, பின்னே வந்த அம்மையின் ஆடையில் பட, அதனை அறியாத இவர் வீடடைந்தார். பூசகர் காலையில் திருக்கோயிலில், அம்மையின் ஆடையில் தாம்பூலக்கறைகண்டு பதறி, நிர்வாகிகளிடம் கூற, இரவு இறுதியாக வந்த கவிராயரை விசாரிப்போம் என்று விசாரித்தனர். கவிராயர், வழிபாட்டுக்கு வழக்கம்போல் வந்ததும், தாம்பூலம் தரித்துப்பாடிக்கொண்டே சென்றதும், இடையில் துப்பியதும் ஒப்புக்கொண்டு, அம்மையின் ஆடையில் பட்டதுபற்றித் தெரியாதென்றார். நிர்வாகத்தார் இவரிடம், உமது பாடலால் அம்மையின் கையில் உள்ள செண்டு உமது கைக்கு வருமானால் உமது பத்திமையை ஏற்போம் என்றுகூற, கவிராயரும் அவ்வாறே பாட, அம்மைகையில் இருந்த செண்டு, இவர் கைக்குவந்து சேரக்கண்டு கைகூப்பினர்.

துணைவியார் இறந்தபின், தன்இளமகளின் பராமரிப்பில் வாழ்ந்தார். பூப்படைந்த அம்மகள், இவர் இரவுவீட்டுக்கு வந்ததும் உணவுபடைக்க உறவினர் ஒருவரைக்கேட்டுக்கொண்டாள். அன்று உலகம்மையே

அவ்வுறவினர் வடிவில் வந்து உணவருத்திச் செல்ல, பின்னர் உணவு படைக்கவந்த வந்த உறவினர் நிகழ்ந்ததை அறிந்து வியந்து போற்றினர் என்ற நிகழ்வும் உண்டு.

அருட்செல்வராகிய இவர் இயற்றிய நூல்கள், உமையம்மை கலித்துறை அந்தாதி, உமையம்மை பதிற்றுப்பத்து அந்தாதி, உமையம்மை கொச்சகக்கலிப்பா, உமையம்மை ஆசிரியச் சந்தவிருத்தம், உமையம்மை பிள்ளைத்தமிழ், சிலேடை வெண்பா மாலை ஆகிய ஆறாகும். இவை சொற்செறிவு, பொருட் செறிவு, கற்பனை வளம், இடையிடையே வடமொழிச் சொற்கள் அமைந்தவை; விருந்துபடைப்பவை. இவற்றுள் கலித்துறை அந்தாதி, கொச்சகக் கலிப்பா ஆகியனவற்றுக்கு வழக்கமான முறையில் உரைவிளக்கம் எழுதி வலைத்தளத்தில் பதிவிட்டுள்ளேன். தற்போது சந்தவிருத்தத்திற்கு உரைவிளக்கம் தந்துள்ளேன். இவரது பிறநூல்களுக்கும் உரைவிளக்கம் எழுதத்திருவருள் கூட்டுவிக்க வேண்டுகிறேன்.

இக்கவிராயரின் அனைத்துநூல்களுக்கும் இதனையே தோரணவாயிலாகக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

இவரது நூல்கள் ஆறினையும், தமிழூரில் அமைத்த உலகத் தமிழ்க் இயக்கத்தின் சார்பில் அருமை நண்பர் முனைவர் ச. வே. சுப்பிரமணியனார் அவர்கள், மதுரை தெற்காவணிமூலவீதியில் வாழ்ந்த பெரும்புலமையராகிய மு. ரா. கந்தசாமிக்கவிராயரின் குறிப்புரையுடன் பிரபந்தத்திரட்டாக வெளியிட்டுள்ளார்.

அந்நூலில் இருந்தஅச்செழுத்துப்பிழைகளைகளைத் திருத்திக்கொண்டு, வழக்கம்போல் தேவையான இடங்களில் கூட்டுமுறை, குறிப்புரை, பொழிப்புரை, விளக்கம். இலக்கணக்குறிப்பு ஆகியவற்றுடன் இதனைப் பதிவிட்டுள்ளேன். ஆர்வலர்கள் படித்தின்புற வேண்டுகிறேன்.

அன்புடன்
குன்றக்குடி ஆதீனப்புலவர்
வித்துவான் க. கதிரேசன் எம். ஏ; பிஎட்
பூவாளூர்

## நூல்

சந்தம்

1. தாந்த தன்னன தான தனந்தன
தாந்த தன்னன தான தனந்தன
தாந்த தன்னன தான தனந்தன - தனதான.

வாழ்ந்த(து) என்னவி சால தலங்களை
ஆண்ட(து) என்னப்ர தாபம் மிகுந்(து)இறு
மாந்த(து) என்னவிர் தாவின் மதங்கொடு - தலைகீழாய்
வீழ்ந்த(து) என்னஜ யோபி ற(கு)அங்(கு)அவர்
மாண்ட(து) என்னபொ யோஎன இங்(கு)இனி
வேண்டி என்னபி ரயோசம் நின்பதம் - அடைவேனோ
சூழ்ந்து பன்னிரு காதம் மணம்கமழ்
தேன்கள் விம்மிஇ றால்கள் கிழிந்(து)இடை
தூங்கு தென்மலை வாசல் நின்(று)அடி - யவர்போலத்
தாழ்ந்து சந்நிதி புகுந்(து)அலை
மோந்து தண்மலர் மாரி பொழிந்திடு
தாம்ப்ர பன்னிம காநதி நின்றஎன் - உலகாளே.

**குறிப்புரை** : விசால தலங்கள்= மிகப்பெரிய நாடுகள். ப்ரதாபம்= புகழ் / வீரம். இறுமாந்து= செருக்குற்று. விர்தா= பயனின்றி. மதம்= ஆணவம். தலைகீழாய் வீழ்ந்தது= நிலையழிந்தது. பொயோ= பொய்யன்று. வேண்டி= அவர்களைப்போல் ஆளவேண்டும் என்று வேண்டி. சூழ்ந்து= சுற்றிலும். காதம்= நான்கு கூப்பிடுதூரம் ( 10 மைல் என்பதும் உண்டு ). தேன்கள்= தேனீக்கள். விம்மி= புடைத்து. இறால்கள்= தேனடைகள். தூங்கு= தொங்கும். தென்மலைவாசல்= பொதியமலைக்கோயிலின் வாசல். தாழ்ந்து= வணங்கி. அலைமோந்து= அலைகளாகிய கைகளால் முகந்து. தாம்ப்ரபன்னி= தாமிரவருணியாறு. நின்ற= கரையில் எழுந்தருளிய.

**பொழிப்புரை** : தாயே! தேனீக்கள்சூழ்ந்து புடைத்ததால் தேனடைகிழிந்து, சுற்றிலும் நான்கு கூப்பிடுதூரம் மணம்பரப்ப, இடையிடையே இடையிடையே தேனடைகள் தொங்கும் உன்பொதிகைமலைக்கோயிலின் வாசலில் இருந்து, உனது அடியவர்போல் தன் அலைகளாகிய கையால் தண்ணிய மலர்களை மலர்மாரி யாகப் பொழியும் பொருநைப் பேராற்றின் அலைதவழும் கோயிலில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையே!

மிகப்பலர் சிறப்பாக வாழ்ந்தது, மிகப்பெருநிலம் ஆண்டது, அவர்கள் தம்வீரம் / புகழ் மிகுந்ததால் செருக்குக்குற்றது, ஐயோ! வீணே ஆணவம்கொண்டு நிலதடுமாறிப் பயனின்றி இறந்தது, ஆகிய இவைஎல்லாம் பயனற்றன என்பது பொய்யன்று, மெய்யே! பயனற்ற அந்நிலைகளை உன்னிடம் நான் வேண்டேன்! உன்திருவடிகளையே வேண்டி அடைவேன்.

**விளக்கம்** : புகழ், மண்ணாசை முதலியன வேண்டா, உன்திருவடியே வேண்டும் :

" வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம் மண்ணும் விண்ணும்
வேண்டேன் பிறப்புஇறப்புச் சீலம்வேண்டார் தமைநாளும்
தீண்டேன்,சென்று சேர்ந்தேன்மன்னு திருப்பெருந்துறை இறைதாள்
பூண்டேன்புறம் போகேன்இனிப் புறம்போகல் ஒட்டேனே " ( திருவாசகம் 512 )

**இலக்கணக்குறிப்பு** : ஐயோ - கழிவிரக்கக்குறிப்பு.

2. சந்தம்

தனந்த தானன தனதா னனதன
தனந்த தானன தனதா னனதன
தனந்த தானன தனதா னனதன - தனதான

பரந்து நாள்தொறும் அறிவீன ரைமனது
உளைந்து பாடியும் உதவார் அதுகொடு
பசும்பொன் ஆயிரம் வருமா கிலுமவர் - பிறகேபோய்
இரந்து தான்முடி யா(து)அ தைவிட
இறந்து போவ(து)ஒ ருதாழ் விலைஎன(து)
இடும்பை பாரத கதைதான் உனதிரு - அருள்தாராய்
புரந்த ராதியர் பதம்ஓர் அணுஎன
இகழ்ந்து ஞானமும் அனுபூ தியும்நிலை
பொருந்து போதமும் உடையார் பெறுகதி - பெறுவேனோ
கரந்தை வார்சடை முடியார் இருகரம்
வகிர்ந்து கோதிய குழலாய் தமிழ்முனி
கமண்ட லோதக நதிமேல் கரைவளர் - உலகாளே.

**குறிப்புரை** : பரந்து= அலமந்து. உலைந்து= வருந்தி. அதுகொடு= அதனால். பிறகேபோய்= பின்னால் போய். தாழ்விலை= இழிந்ததன்று. பாரதக்கதை= மிகப்பெரியது. புரந்தராதியர்= இந்திரன் முதலியோர். பதம்= பதவி. ஓர் அணு= மிகமிக அற்பமானது. அனுபூதி= பிரமாணங்களால் பெற்ற ஞானம். நிலைபொருந்து போதம்= நிலைத்த மெய்ஞ்ஞானம். பெறுகதி= வீடுபேறு. கரந்தை= கரந்தைமலர். வகிர்ந்து கோதிய= பிரித்துச் சீவிய. கமண்டல ஓதக நதி= கமண்டலத்தில் இருந்து வெள்ளமாகப் பெருகிய பொருநையாறு.
( உன திருவருள் என்பதை; உனது இருஅருள் என்றுபிரிப்பினும் அமையும். இரு= பெருமை. )

**பொழிப்புரை** : கரந்தைமலர் சூடிய நீண்ட சடையுடைய சிவபிரான், தனது இருகைகளாலும் கூந்தலைவகிர்ந்து சீவிய கூந்தலுடையவளே! அகத்திய முனிவரின் கமண்டலத்தில் இருந்து வெள்ளமாகப் பெருகிய பொருநையாற்றின் கரையில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையே! இந்திரன் முதலியோர் பதவிகளும் மிகமிக அற்பமானதுஎன்று வெறுத்து; அறிவும், பிரமாணங்களால்பெற்ற ஞானமும், என்றும் மாறாது நிலைத்த ஞானமும் உடையஞானியர்பெறும் வீடுபேற்றை நான்பெறுவேனோ!

நாள்தோறும் அலமந்தும், அறிவில்லாதவரை என்மனம்நொந்து பாடியும், பொன்பொருள் உதவார். சிறந்தபொற்காசுகள் ஆயிரம்வருமாயினும் அவர்பின் அவரைவழிமொழிந்து யாசிப்பது இனி என்னால் முடியாது. அப்படிவாழ்வதைவிட இறந்துபோவது இழிந்ததன்று. என்துன்பம்மிகமிகப்பெரியது. அருள் கூர்ந்து உனது திருவருளை அருள்க.

**விளக்கம்** : மிகமிகப் பெரியது என்பதை குறிக்க “ அது பாரதக் கதை “ என்பது நாட்டுவழக்கு.
திருவடிஞானமே வேண்டுவோர் விண்ணோர் பதவிவேண்டார்:
“ கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதுஅடியாரொடு அல்லால் நரகம்புகினும்
எள்ளேன் திருவருளாலே இருக்கப்பெறின் இறவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லாது எங்கள் உத்தமனே ” ( திருவாச. 6 )
( திருவடி ஞானம் நிலைத்தது. புரந்தரன் முதலியோர் வாழ்வு நிலையாதது )

**இலக்கணக்குறிப்பு** : கொடு, இலை - இடைக்குறைகள்.

3. பிறந்த நாள்முதல் உனைத்து திசெய்திட
மறந்து போனது விதிதான் இனியொரு
புறம்ப தாகவும் மனமே கனவிலும் - நினையாதே
இறந்து போனது நிசமே அடிமையும்
இருந்த நாள்வரை உனையே மலரடி
இறைஞ்ச வேஅருள் புரிவாய் திரிபுரை - அபிராமி
சிறந்த கோமதி மயிலே குயில்மொழி
நிறைந்த சோதியின் வடிவே மலைமகள்
திகம்ப ரீஎனும் அழகே அழகொளிர் - சிவகாமி
கறந்த பாலமு தம்நிவே தனம்அதை
அருந்தி யேபொதி கையில்வாழ் தமிழ்முனி
கமண்ட லோகத நதிமேல் கரைவளர் - உலகாளே.

**குறிப்புரை** : புறம்பதாக= வேறானதாக. இறந்து போனது= கழிந்தது. கறந்தபால் அமுதம்= காய்ச்சாத பாலாகிய அமுதம்.

**பொழிப்புரை** : திரிபுரை, அபிராமி, சிறந்தகோமதி, மயில், குயில்போன்று விளங்குகிறவளே! பேரொளிப்பிழம்பின் வடிவு, மலைமகள், திகம்பரி என்று போற்றபெறும் அழகியே! அழகேஒளிரும் சிவகாமியே! கறந்தபாலினைக் காய்ச்சாது உனக்கு நிவேதனம் செய்ய அதை உட்கொண்டுவாழும் அகத்திய முனிவரின் கமண்டலத்திலிருந்து வெள்ளமாகப்பெருகிய பொருநையாற்றின் கரையில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையே!

நான்பிறந்த நாள்முதலாக உன்னைத் துதிக்க மறந்துபோனது என் விதியாகும். இனி உன்னை வேறானவளாக மனத்தில் கனவிலும்கூட நினையாது, நாட்கள் கழிவது உண்மையாகும்- உன்னைமறவேன். அடிமையாகிய நான்என் வாழ்நாள்வரை உன்மலரடியே துதிக்க அருள்புரிவாய்.

4. **தான தத்தன தான தனந்தன**
**தான தத்தன தான தனந்தன**
**தான தத்தன தான தனந்தன - தனதான**

தூரம் எத்தனை வேனில் நெடுஞ்சுர
கோரம் எத்தனை காடுநெ ருங்கிய
சூழல் எத்தனை மாகடி னம்சொல - முடியாதே
பார்அ னைத்திலும் ஓடி நடந்(து)இரு
கால்க டுத்த(து) அலாமல் இதம்பெறு
பாட லுக்(கு)ஒரு காசுப ணம்தரு - பவர்காணேன்
ஆர ணப்பிர மாதியர் விஞ்சையர்
தேவர் சித்தர் முனீசுரர் புங்கவர்
ஆதி பத்திய ரான புரந்தரர் - முதலானோர்
சார நித்திய சேவைவ ழங்கிமண்
மீது தெக்கண பாரிச அம்கிரிச்
சார லில்கொலு வாகஇ ருந்தஎன் - உலகாளே.

**குறிப்புரை** : சுரகோரம்= பாலைநிலக்கொடுமை. மாகடினம்= நடக்கமிகக்கடினம். பார்= உலகம் / நிலம். இதம்பெறு= மனம் இனிமையடையும். ஆரணப் பிரமாதியர்= வேதம் ஓதும் பிரமன்முதலியோர். புங்கவர்= வானோர். ஆதிபத்தியரான புரந்தரர்= அரசாளும் இந்திரன். சார= வர. நித்திய சேவை= நாடோறும் காட்சி. தெக்கண பாரிசம்= தென்திசைப்பக்கம். . அம்கிரி= அழகியபொதிகைமலை.

**பொழிப்புரை** : வேதம்ஓதும் பிரமன் முதலியோர், விஞ்சையர், தேவர், சித்தர், முனீசுரர், வானோர், அரசாளும் இந்திரர் முதலியோர் நாடோறும் வணங்கவர, அவர்களுக்குக் காட்சித்தந்து, இவ்வுலகில் தென்திசையிலுள்ள அழகிய பொதிகைமலைச்சாரலில் கொலுவீற்றிருக்கும் என்வணக்கத்திற்கு உரிய அருள்தருஉலகம்மையே!

கோடையில் உண்டாகும் பெரும்பாலைநிலத்தில் நடந்தது எவ்வளவு தூரம்! காடு அடர்ந்த பகுதிகள், நடக்கமிகக் கடினமானஇடங்கள் எத்தனை! அளவிடமுடியாதன. இவ்வாறு உலகமெங்கும் ஓடியும் நடந்தும் இருகால்களும் வலித்தது தவிர, மனத்துக்கு இனியஎன் பாடலுக்கு ஒருகாசு,பணம் தருவார் யாருமில்லை. நீயாவது அருள்க.

**விளக்கம்** : சுரம் என்றது, குறிஞ்சியும் முல்லையும் வேனில் வெப்பத்தால் கரிந்து தீய்ந்த நிலப்பகுதியே தவிர மணல் வெளியன்று.

**இலக்கணக்குறிப்பு** : பிரமாதியர் விஞ்சையர் தேவர்........புரந்தரர் - எண்ணும்மைத் தொகைகள். .

5. **தந்த தான தனத்தன தானன**
**தந்த தான தனத்தன தானன**
**தந்த தான தனத்தன தானன - தனதான**

கட்டு பாசம் இறுக்குவ ராம்நய
னத்தில் ஊசி நிறுத்துவ நாம்நர
கத்தி லேதலை குப்புற வேவிழ - எறிவாராம்
வெட்டி ஊறுப டுத்துவ ராம்அதில்
உப்பு நீரும் ஒழுக்குவ ராம்அழல்
மெத்தி வாதை வருத்துவ ராம்மனம் - உருகாராம்
கிட்டி ஊடு நெறுக்குவ ராம்எமன்
உக்கர தூதர்பொ றுக்கரி யார்அவர்
கிட்டி நாளும் அலக்களி யா(து)அருள் - பெறுவேனோ
முட்டி லாமல்அ றத்தைஎந் நாளும்வ
ளர்த்து நீர்பொரு நைத்துறை மேவிய
முக்க ளாநிழ லில்குடி வாழும்என் - உலகாளே.

**குறிப்புரை :** பாசம்= கயிறு. ஒழுக்குவர்= ஊற்றுவர். மெத்தி= ஏற்றி. கிட்டி= உறுப்பை நெருக்கித் துன்புறுத்தும் கருவி. உக்ர= கொடிய. கிட்டி- அடைந்து. முட்டிலாமல்= குறைவின்றி.

**பொழிப்புரை :** வெளிப்படை.

6. **தான தத்தனத் தனத்தனத்த தானதன**
**தான தத்தனத் தனத்தனத்த தானதன**
**தான தத்தனத் தனத்தனத்த தானதன தனதனாதனனா**

வேத னுக்(கு)எனைக் கருப்பிடிக்க வேலைபல
தாய ருக்(கு)எனைப் பெறச்சலிக்க வேலைஒரு
மேதி னிக்கொடிக்(கு) எனைச்சுமக்க வேலைகொடு - நரகிலேநமனார்
தூத னுக்(கு)எனைப் பிடித்(து)இ ழுக்கவேலைஎம
ராச னுக்(கு)எனைச் சிதைத்(து)இ றுக்கவேலைஎளி
தோபி றப்பெடுத்(து) எனக்(கு)இ றக்கவேலைஇவை - ஒழியுநாள்உளதோ
சாத னத்தவத்(து) அகத்தியமா முனிவன்ஆ
தரித்த சித்திரைப் பிறப்பிலேவருவ
தாம்ம கத்துவத் தைவித்தரிக்க லோகம்அதி - சயமதாம்எனவே
மாதர் மக்கள்ஒக் கமிக்கமுக்கிய ராய்முழுகு
மாது முத்தமிழ்க் கிரிப்புறத்தில் வீழ்பொருநை
மாரு திப்படித் துறைக்(கு)அடுத்த கோவில்வளர் - உலகநாயகியே.

**குறிப்புரை :** கருப்பிடிக்க= பிறக்கச்செய்ய. மேதினிக்கொடி= நிலமகள். சிதைத்து= உயிரைப்பிரித்து. சாதனத் தவத்து= உறுதியான தவமுடைய. ஆதரித்த= விரும்பிய. மகத்துவத்தை= மேலான விழாவை. வித்தரிக்க= விரிவாகக் கூற. ஒக்க= ஒருசேர. முத்தமிழ்க்கிரிப்புறத்தில்= பொதிகைமலையில். மாருதிப் படித்துறை என்பது நீராடும் படித்துறையின்பெயர். கோவில் வளர் மாது உலகநாயகியே என்று கூட்டுக.

**பொழிப்புரை :** தவத்தில்உறுதியான அகத்தியமா முனிவர் விரும்பிய சித்திரை மாதப்பிறப்பன்று அமையும், அம்மை அப்பன் திருமணமாகிய மேலான திருவிழா உலகில் அதிசமானதாகும். எனவே அந்நாளில் மகளிர், பொதுமக்கள், முக்கியர் அனைவரும் பொதிகைமலைக்கண் இறங்கும் பொருநையாற்றில் ஒருசேரநீராடும் மாருதிப்படித்துறையையொட்டிய திருக்கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவியாகிய அருள்தரு உலகநாயகியே!

பிரமனுக்கு என்னைப் பிறப்பிப்பதில் வேலை; பலதாய்மாருக்கு என்னைப் பெற்றெடுப்பதில் சலிக்கும் வேலை; ஒப்பற்ற நிலமகளுக்கு என்னைச் சுமக்கும் வேலை; கொடியநரகத்திற்குஎன்னைப்பிடித்து இழுத்துச் செல்ல எமதூதனுக்கு வேலை,அரசனாகிய எமனுக்கு என்னைக் கிட்டியில் வைத்து இறுக்கித் துன்புறுத்த வேலை, நான்பிறந்தது மீண்டும் இறப்பதற்கான வேலை. இவைஎல்லாம் உன்னருளால் என்னைவிட்டு ஒழியும்நாள் உள்ளதா ? இவை ஒழியஅருள்புரிக.

**விளக்கம் :** புராணக்கதையையொட்டி, அம்மையபன் திருமணத்தைக் கயிலையில் காண்பதற்குக் கூடிய மாபெருங் கூட்டத்தால் பூமியின் சமநிலை கெட்டு, வடக்குத்தாழ, தெற்கு உயரநேர்ந்ததால்

சமநிலை செய்ய, அகத்தியரைத் தென்திசைசெல்ல அப்பன் பணித்தான். அகத்தியர், இறைவி இறைவன் திருமணம்காணும் தன் விருப்பைக்கூறி வேண்ட " பொதிகையில் திருமணக்காட்சியைக் காட்டுவோம் கண்டு மகிழ்க " என்று அருளியதால் தென்திசை வந்த அகத்தியர்க்குத் தமிழ்ப்புத்தாண்டாகிய சித்திரை முதல்நாளில் திருமணக்காட்சி காட்ட, கண்டு மகிழ்ந்தார் அகத்தியர். அதுவே பெருவிழாவாகத் தொடர்ந்தது. இந்நிகழ்ச்சியையே " அகத்தியமா முனிவன் ஆதரித்த சித்திரைப் பிறப்பிலே வருவதாம் மகத்துவம் " என்று குறிக்கிறார்.

அந்நாளில் அனைவரும் பொருநையின் **மாருதிப் படித்துறை**யில்நீராடி, கரையில் அமைந்துள்ள திருக்கோயிலில் அருள்தரு உலகம்மையை வணங்கி வரம்பெறும் நிகழ்வு குறிக்கிறார்.

" மாதா உடல்சலித்தாள் வல்வினையேன் மெய்சலித்தேன்
வேதாவும் மெய்சலித்து விட்டானே "

என்றபாடலின் கருத்தை இதில் காணலாம்.

**7.** **தத்தன தனனத் தாத்த தந்தன**
**தத்தன தனனத் தாத்த தந்தன**
**தத்தன தனனத் தாத்த தந்தன - தனதான**

மித்திரர் குறையைக் கேட்க வும்பெறு
புத்திரர் பசியைப் பார்க்க வும்தமிழ்
விற்கவும் மெலிவுற்(று) ஏற்கவும் தொழில் - பலவானேன்
எத்தனை கவலைக்(கு) ஆற்று வன்தினம்
இப்படி அலையப் பார்த்தி ருந்தனை
. எப்படி மறுமைக்(கு) ஏற்ற சிந்தனை - பெறுவேனோ
தத்திடு பொருநைத் தீர்த்த மும்படி
வித்(து)உறு வினையைப் போக்கி அன்பொடு
தட்டுறு புவனத் தோர்க்(கு)அ ரும்கதி - தருவாயே
சித்தசன் உருவைத் தேய்த்த புங்கவ
கர்த்தனோ(டு) அருளைப் பூத்தி ருந்(து)ஒரு
சித்திரை விசுவில் காட்சி தந்தஎன் - உலகாளே.

**குறிப்புரை** : மித்திரர்= நண்பர்கள். தொழில் ஏற்க= செயற்பட. தத்திடு= அலையெறியும் படிவித்து= நீராடச்செய்து. தட்டுறு= காணும். சித்தசன்= மன்மதன். உருவைத் தேய்த்த= உருவத்தை நீறாக்கிய. புங்கவ கர்த்தன்= இறைவனாகிய கருத்தா. பூத்திருந்து= அருளி. விசு= சித்திரை முதல்நாள்.

**பொழிப்புரை** : அலையெறியும் பொருநைநீரில் நீராடச்செய்து, மிக்கவினைகளைப் போக்கி. அன்புடன் தன்னைக்கண்டு வணங்கும் உலகவர்க்கு வீடுபேறு தருபவளே! மன்மதன் உருவத்தை நீறாக்கிய சிவபிரான்ஆகிய கர்த்தாவின் - முழுமுதலுடனிருந்தருளி, சித்திரைத்திங்கள் முதல்நாளில் அகத்தியர்க்குக் காட்சிதந்த வணக்கத்திற்குரிய அருள்தரு உலகம்மையே !

நண்பர்களின் குறைகளைக் கேட்கவும், பெற்ற மகன்களின் பசியைப் பார்த்துக் கொண்டிருக்கவும், கற்ற தமிழைப்பலரிடம் விற்கவும், இவற்றால் உள்ளமும் உடலும் மெலிந்து பலவாறு செயற்படலானேன். தினமும் எத்தனை கவலைகளைத்தான் பொறுத்துக்கொள்வேன். நாடோறும் நான் இவ்வாறு அலையப் பார்த்துக்கொண்டிருக்கிறாய். இந்நிலையில் மறுமைக்குப் பொருத்தமான சிந்தனையை எப்படிப்பெறுவேன்! தாயே! அருள்க.

**8.** **தத்தன தத்தன தத்தன தந்தன**
**தத்தன தத்தன தத்தன தந்தன**
**தத்தன தத்தன தத்தன தந்தன - தனதான**

துர்ச்சன சங்கம்வெ றுத்(து)உனை நம்பியே
சற்சன சங்கஇ லட்சணம் மிஞ்சிய

சொர்க்கப தங்களை நித்திய மும்தொழ - மருளாதே
முற்சன னங்கள்கொ டுத்திடு சஞ்சலம்
முற்றிஎ ழுந்தது யர்களை யும்தவிர்
முத்திவ ழங்கஅ னுக்ரம் என்(று)அருள் - புரிவாயோ
கற்சிலை எந்தைசி வத்தஉ டம்பினில்
பச்சிலை முந்துப றித்தணி பண்புறு
கற்புவி ளங்கிய பொற்புவி ளங்கிய - கடலேகூ
விற்சிலை தாங்குநு தல்சிறு பெண்கள்மு
முடித்தசு கந்தம் மணக்குநெ டுந்தெரு
விக்கிர சிங்கபு ரத்தில்இ ருந்தஎன் உலகாளே.

**குறிப்புரை** : துர்ச்சன சங்கம்= துஷ்டர் கூட்டம். சற்சன சங்கம்= சான்றோர் கூட்டம். இலட்சணம் மிஞ்சிய= அழகுமிகுந்த. சொர்க்கபதம்= சுவர்க்கம் முதலிய நிலை. மருளாதே= மயங்காமல். முற்சனனங்கள்= முன்னைப் பிறப்புகள். சஞ்சலம் முற்றி= வருத்தங்கள் முதிர்ந்து. அனுக்ரகம்= தயை - கருணை. கற்சிலை எந்தை= மேருவில்லை ஏந்திய எம்தந்தை - சிவபிரான். முந்துபச்சிலை பறித்து அணி பண்பு உறு= முதன்மையான பச்சிலைகளைப்பறித்து அணிந்த பசிய பண்புமிக்க. பொற்பு விளங்கிய= அழகுடைய. .கூ வில்= ஒளியுடைய வில்(புருவம்). முடித்த= பூசிய. விக்கிரம சிங்கபுரம்= பாவநாசம்.

**பொழிப்புரை** : மாமேருமலையாகிய வில்லேந்திய எம்தந்தையாகிய சிவபிரானின் சிவந்த திருமேனியில், முதன்மையான பச்சிலைகளைப் பறித்துஅணிவித்தது போன்றதன்மையுடைய பசியநிறமுடன், கற்புவிளங்கிய அழகுநிரம்பிய கடலாக விளங்குகிறவளே! ஒளியுடைய நெற்றியில் வில்லாகிய புருவமுடைய சிறுமியர் பூசியநறுமணப்பொருள் மணக்கும் நீண்ட தெருக்களுடைய விக்ரமசிங்கபுரத்தில் அருளாட்சி புரியும் எனது வணக்கத்திற்குரிய அருள்தரு உலகம்மையே!

உன்னையே நம்பி துஷ்டர் கூட்டத்தை வெறுத்து, சான்றோர் கூட்டதின் அழகுமிக்க மேலான சுவர்க்கம் முதலிய நிலைகளை நாடோறும் போற்ற மயங்காமல், முன்னைய பிறவிகள் காரணமாக ஊழ்வினை கொடுத்த வருத்தங்கள் முதிர்ந்து தோன்றிய துயரங்களையும் தவிர்த்து, முத்திப்பேறு வழங்க எந்நாளில்எனக்குக் கருணைபுரிவாய்!

9.

**தனதானன தானன தானன**
**தனதானன தானன தானன**
**தனதானன தானன தானன - தனதான**

விரகாதியில் வீழ்பழி பாதகன்
உபகாரச ரீரம்ள டாதவன்
விபரீத விரோத விபாஷிதன் - அமராதே
இரவாமல் இராத பசாசன்ஓர்
பரிபாகம்இ லாதநிர் மூடன்உன்
இருபாதச ரோருக சேவைசெய் - திடுவேனோ
பரஞானத் ரிகோண க்ருபாகர
அபிராம மனோகர மோகித
பரிபூரண காரண கோமள - மகமாயி
உரகாபரண நேசபி ரானொடு
மலையாசல பாரிசம் ஆகிய
உயர்மாமதில் ஆலயம் மேவிய - உலகாளே.

**குறிப்புரை** : விரகம்= காமநோய். வீழ் பழிபாதகன்= விழுந்த பழிக்கத்தக்க பாதகன். உபகாரசரீரம்= உதவும் பிறப்பு. விபரீத விரோத விபாஷிதன்= விபரீதவழியில் பகைத்து உறவினரை மோசம்செய்பவன் . அமராதே= சும்மாஇராமல். இரவாமல் இராத= யாசிக்காமல் இருக்காத. பசாசன் பேய்க்குணத்தன். பரிபாகம்= பக்குவம். சரோருகம்= தாமரைமலர். பரஞான த்ரிகோண= மேலான ஞானம்குறிக்கும் முக்கோணம். க்ருபாகர= கருணைவடிவே. மனோகர= அழகுடைய. மோகித= விரும்பத்தக்க. காரண= மூலப்பொருளான. கோமள= இளமையுடைய. உரகாபரண நேசபிரான்= நாகமாகிய அணிகலனை விரும்பும் சிவபிரான்.

**பொழிப்புரை** : மேலான ஞானமாகிய முக்கோணத்தில் உள்ள கருணைவடிவே! அபிராமியே! விரும்பத்தக்க அழகுடன் முழுமையும், மூலப்பொருளாகவும் விளங்கும் என்றும் இளைய மேலான தாயே! நாகத்தை அணிகலனாக விரும்பும் சிவபிரானுடன் பொதிகைமலைப்பக்கம் உள்ள உயரமான பெரிய மதில் சூழ்ந்த திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையே!

காமநோயில் வீழ்ந்து பழிக்கப்பட்ட பாதகன், பிறர்க்கு உதவாத பிறவிஎடுத்தவன், விபரீதவழியில் பகைத்து உறவினர்க்கு மோசம் செய்பவன், சும்மாஇராமல் பிறரிடம்யாசித்துக்கொண்டே இருக்கும் பேய்க்குணன், மனப்பக்குவம் இல்லாமுழுமுட்டாள் ஆகியநான், உன் இருதிருவடித்தாமரைக்குத் தொண்டு செய்யும்பேறு பெறுவேனோ! அருள்புரிக.

10.
**தனனத் தாத்த தனத்தன தானன**
**தனனத் தாத்த தனத்தன தானன**
**தனனத் தாத்த தனத்தன தானன - தனதானா**

உடல்விட்(டு) ஆத்மம் இறக்குமு னேகிறு
கிறுஎன சேத்மம் இழுக்குமு னேஎன(து)
உயிர்விட்(டு) ஆக்கை கிடக்குமு னேசில - சிலபேர்போய்
உறவுக் கோக்கள் அழைக்கு முனேஅவர்
இழவுக் காட்சி கொடுக்குமு னேஎனை
ஒருமித்(து) ஆட்கள் எடுக்குமு னேபறை - ஒலியோடே
சுடலைக் காட்டின் அடக்கு முனேஅதில்
எருவைக் கூட்டி அடுக்கு முனேஒரு
துறையில் தீர்த்தம் எடுக்கு முனேதலை - மயிர்ஊடே
சுருளத் தீக்கொளி வைக்கு முனேமட
மடெனக் காட்டெரி பற்றுமு னேஒரு
துணையற் றேற்குநின் நல்பத தாமரை - அருள்வாயே
கடலில் காட்டிய புக்தமு தேவடி(வு)
எழுதிக் காட்டிய சித்திர மேபர
கதியைக் காட்டிய தற்பர மேசுவை - யுறுதேனே
கருணைக் கூத்தினர் முக்கள ஈசரை
மருளப் பார்த்த விழிக்குயி லேவிரை
கமழப் பூத்த மெயுற்றவி லோசன - மகமாயி
படலைத் தேத்துள விற்(கு)ஓர்ச கோதரி
பொதியக் கோட்டுறை முத்தமிழ் மாமுனி
பரவக் காட்சிகொ டுத்தக்ரு பாகர - அபிராமி
பனசக் கோட்டுர சக்கனி யேதெய்வ
மகளுக்(கு) ஏற்றிடு பொற்கல மேமறை
பழகிப் போற்றிடு நித்யகல் யாணிஎன் - உலகாளே.

. **குறிப்புரை** : ஆத்மம்= ஆன்மா. இறக்குமுன்னே= வெளியேறுமுன். சேத்மம்= கபம். உறவுக்கோக்கள்= முக்கிய உறவினர். இழவுக்கு ஆட்சி= இறப்பைக்கூறுதல். அடக்கும்முன்= அடக்கம் செய்யும்முன். எரு= வரட்டி. மயிர் சுருள= மயிர் தீயால் சுருண்டு எரிய. தீக்கொளி= கொள்ளியாகிய தீ. காட்டுஎரி= சுடுகாட்டுத்தீ. பததாமரை= திருவடித்தாமரை. காட்டிய= தோன்றிய. பரகதி= வீடுபேறு. தற்பரம்= தனக்குத்தானே மேலானவள் - தலைவியாக நியமிப்பாரில்லாதவள். கருணக்கூத்தினர்= ஐந்தொழில் கூத்தாடும் சிவபிரான். மருள= மயங்க. விரை கமழப்பூத்த மெயுற்ற= மணக்கும் தாமரைத் திருமேனியில் மலர்ந்த. விலோசனம்= கண். படலைத் தேத் துளவு= மாலையாக அணியப்பெற்றதும் தேன் உடையதும் ஆகிய துளசிமாலையணிந்த திருமால். பரவ= போற்றி வணங்க. நித்யகல்யாணி= என்றும் சுமங்கலி என்றுபொருள் தரும் பெயர்.

**பொழிப்புரை** : திருப்பாற்கடலில் தோன்றியபுதிய அமுதமே! அழகுறத் தீட்டப்பெற்ற ஓவியமே! தன்னைநியமிப்பாரில்லாத் தலைமையளாய் வீடுபேறு வழங்குகிறவளே! சுவைமிக்க தேனே!

ஐந்தொழிற்கூத்தாடும் முக்களாஈசர் மயங்குமாறு நோக்கும்பார்வையுடைய குயிலே! மணக்கும் தாமரைத் திருமலர்போல் மலர்ந்த கண்களுடைய பெருந்தாயே! மாலையாகக் கட்டப்பெற்றதும் தேனுடையதும் ஆகிய துளசிமாலையணிந்த திருமாலின் தங்கையே! பொதிகைமலையில் வாழும் அகத்தியர் போற்றி வணங்கக் காட்சிதந்த கருணைக்கு இருப்பிடமே! அபிராமியே! பலாமரக்கிளையில் பழுத்த இனியபலாக் கனியே! தெய்வமகளிர் அணியும் பொன்னாலான அணிகலமே! மறைகள் மிகுதியாகப் போற்றும் நித்யகல்யாணி என்னும் அருள்தரு உலகம்மையே!

உடலைவிட்டு ஆன்மா வெளியேறுமுன், கபம் தொண்டையில் கிர்கிர் என்று ஓசைஎழுப்புமுன், என்னுயிர்பிரிய, உடம்பு செயலற்றுக் கிடக்குமுன், சிலர்போய் முக்கியமானவர்களை அழைக்குமுன், அவர்கள் வந்து இறப்பினைஎடுத்துக் கூறுமுன், என்னுடம்பை அனைவரும் ஒத்தமனத்துடன் தூக்குமுன், பறைஒலியுடன் சுடுகாட்டில் இறக்குமுன், அவ்வுடம்பில் வரட்டியை மிகஅடுக்குமுன், நீர்த்துறையில் நீர் எடுத்துவருமுன், தலைமயிர் சுருளத்தீயுடைய கொள்ளியை வைக்குமுன், விரைந்து சுடுகாட்டுத்தீ பற்றுமுன், தாயே! ஒருதுணையும் இல்லாத எனக்கு உனது சிறந்த இருதாமரைத் திருவடிகளை அருள்க.

**விளக்கம்** : முதலிரண்டடிகளில் ஆன்மாபிரிவதும், பிறகு, பிறர் செயற்பாடுகளையும் நிரல்படக் கூறினார். இப்பகுதியில் கூறப்பெறும் செய்திகள் சில, பதினோராம் திருமுறையில் ஐயடிகள் காடவர்கோன், அருளிய சேத்திரத் திருவெண்பாவில் ஆங்காங்கு குறிக்கப்படுவதைக்காணலாம்.

சிவபிரானின் ஐந்தொழில் கூத்து, ஆன்மாக்களின் ஈடேற்றத்திற்கானதாதலின் அதனைக் " கருணைக் கூத்து " என்றார்.

பிறதெய்வமகளிர் அனைவரும் இவ்வம்மையை மனத்தில் வைத்துப்போற்றும் நிலையினர் ஆதலின், " தெய்வமகளுக்கு ஏற்றிடு பொற்கலம் " என்றார்.

பொருளும் அதன் ஆற்றலும் அழியாத நிலையின என்ற அறிவியல் முடிபின்படி, பொருளாகிய அப்பனும் ஆற்றலாகிய அம்மையும் என்றுமாக நிலைதவர்கள் ஆதலின் அம்மையை " நித்தியகல்யாணி " என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : முனே, கொளி - இடைக்குறைகள். கிறுகிறு, மடமட - இரட்டைக்கிளவிகள். ஆக்கை - தொழிலாகு பெயர். குயில், ரசக்கனி - உருவகங்கள். படலைத் துளவு - வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை

11.

**தந்த தனந்தன தனந்தன தந்தன**
**தந்த தனந்தன தனந்தன தந்தன**
**தந்த தனந்தன தனந்தன தந்தன - தனதான**

இந்தி ரியங்கள் இழுத்த இடந்தொறும்
நின்று நின்றுபி ரமித்தும யங்கிய
இந்த நெஞ்சம்ஏ னக்கோர்பெ ரும்பகை - இனிமேல்யான்
அந்நி யம்தனில் எத்தைவி ளம்புவன்
வந்தி ருந்(து)உள துக்கசு கங்களில்
அங்கும் இங்கும்அ லைக்கழி யும்தொழில் - ஒழியாதோ
மந்த ரமங்கள விக்ரக சுந்தரி
வண்பு யங்கச கஸ்த்தர பணங்கள்சு
மந்தி ருந்தச கத்ரைய மும்தொழு - மகமாயி
சந்ர விம்பமு கத்தொளி கண்(டு)ஒரு
கும்ப சம்பவன் நித்தம்வ ணங்கஊர்
தண்பொ ருந்தந திக்கரை நின்றஎன் உலகாளே.

**குறிப்புரை** : இந்திரியங்கள்= மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய கருவிகளால் துய்க்கும் சுவை ஒளி.ஊறு ஓசை நாற்றம். பிரமித்து= திகைத்து. அந்நியம் தனில்= எனக்குப்புறமானாவற்றில் எத்தை= நெருக்கமானது என்று எதனை. அலைக்கழியும்= அலையும். மந்தர மங்கள விக்ரக சுந்தரி= மந்திரவடிவான மங்கலவடிவான அழகியே. வண்புயங்க சகஸ்தர பணங்கள் சுமந்திருந்த= மிகப்பெரிய ஆயிரம்தலைநாகம் - ஆதிசேடன் சுமக்கும். சகத் ரையமும்= உலகம் முழுதும். சந்த்ரவிம்பம்= சந்திரனின் ஒளி. கும்ப சம்பவன்= கும்பத்தில் தோன்றிய அகத்தியர். தண்= கருணை

**பொழிப்புரை** : மந்திரவடிவும் மங்களவடிவும்கொண்ட அழகியே! மிகப்பெரியஆதிசேடன் ஆயிரம் படங்களால் சுமக்கம்உலகம் அனைத்தும் வணங்கும் பெருந்தாயே! சந்திரனின் ஒளிபோன்று ஒளிரும் உன்முகத்து ஒளியைக்கண்டு அகத்தியமுனிவர் நாடோறும் வணங்க, ஒப்பற்றகருணைபொருந்த, பொருநை நதிக்கரையில் உள்ள திருக்கோயிலில் எழுந்தருளிஇருக்கும் அருள்தரு உலகம்மையே!

என் ஐம்புலன்களும் தத்தம்போக்கில் இழுத்த இடங்களில் எல்லாம் நின்றுநின்று திகைத்து மயங்கிய என்மனமே எனக்குப்பெரியபகையாகும். இனி, எனக்குப்புறம்பானது எது என்று கூறுவேன்! அவற்றால் பெற்றசுகம் துக்கம் ஆகியவற்றால் அங்கும் இங்குமாக அலைக்கழியும் என்செயல் ஒழியாதோ! புலன்களால் அலைக்கழிக்கப்படுவதை ஒழித்தருள்க.

**விளக்கம்** : பொறிகள் ஐந்தையும் மூடியும் பொத்தியும் கொள்ள இயலும். ஆனால் பொறிகளால் பெறும்புலன்களை அடக்கிவைத்தல் அரிதினும் அரிது. எனவேதான் ஐம்புலவேடர் காரணமாக அயர்ந்து வளர்ந்தனை என்றார் மெய்கண்டார், அது," **ஐம்புலவேடரின்** அயர்ந்தனை வளர்ந்து " ( போதம் சூத். 8 ) என்பதாகும்.

நம்மை ஆட்டுவிப்பன ஐம்புலன்கள் என்பதால் அப்பரடிகள்,

" புலன்கள் ஐந்தால் ஆட்டுண்டு " ( திருமு.6 திருவாரூர்,.1. ) என்றார்

"ஐந்தவித்தான் ஆற்றல்" ( திருக்குறள் 25 ) என்பதில் வரும் " ஐந்து "என்பதற்கு பரிமேலழகர் புலன் என்றுபொருள்கொண்டார்.

எனவே பொறிகளிலும், அப்பொறிகளால் பெறும் புலன்கள் வலியன என்பதுபுலனாம்.

12. **தான தானத் தனத்த தனத்தன**
**தான தானத் தனத்த தனத்தன**
**தான தானத் தனத்த தனத்தன - தனதான**

வீர சூலப் படைக்கை தரித்திடு
கோல நீலப் பொருப்பின் மருப்(பு)உயர்
மேதி ஏறித் துரத்தி முடுக்கிஎன் - உடல்மீதே
ஆர வாரித்(து) உறுக்கி முறுக்கிய
பாசம் வீசிப் பிடித்து மடித்(து)என(து)
ஆவி மோசப் படுத்தும் அவத்தையில்- உறலாமோ
வாரி சாதப் பிறைக்குள் வியப்புறு
கேச பாரச் சொருக்(கு)அவி ழப்பதம்
வாடி ஓடிச் சிவப்ப உவப்புடன் - வருவாயே
பார தூரத் தைமுற்று நினைத்(து)அடி
யேனை ஆளக் கருத்தின் நினைத்(து)ஒரு
பாவ நாசத் தலத்தில் இருக்கும்என் - உலகாளே.

**குறிப்புரை** : வீர சூலப்படை= வலிமையான சூலப்படை. நீலப்பொருப்பு= நீலநிறமலை. மருப்பு= கொம்பு. முடுக்கி= விரட்டி. உருக்கி= அதட்டி. முறுக்கிய பாசம்= முறுக்கப்பெற்ற வலிமையான கயிறு. மடித்திடு= கொன்று. மோசப்படுத்தும் அவத்தை= (உடம்பைவிட்டு) பிரிக்கும் துன்பம். வாரிசாதப் பிறைக்குள்= மகளிரின் தாமரை மலர்போன்ற தலையணிக்குள். செருக்கு கேசபாரம் அவிழ= செருகிய பாரமான கூந்தல்அவிழ. பதம்= திருவடி. பாரதூரம்= நெடுந்தொலைவு. பாவநாசத்தலம்= விக்ரமசிங்கபுரம்.

**பொழிப்புரை** : மகளிர் தலையில்அணியும் தாமரைமலர்போன்ற வியக்கத்தக்க அணிகலனுக்குள் செருகிமுடித்த கூந்தல்அவிழ ஓடிவந்ததால், திருவடிகள் வாடிச்சிவப்ப வருகின்றவளே! அடியேனை ஆளக்கருதி, என்னிடம் வருவதற்குரிய நெடுந்தொலைவை முழுமையாக எண்ணி, ஒப்பற்ற பாவநாசமாகிய விக்ரமசிங்கபுரத்திற்கு முன்னதாகவே வந்து வீற்றிருக்கும் அருள்தரு உலகம்மையே!

வலிமையான சூலப்படையைக் கையில்ஏந்தி, அழகியநீலமலைபோல் உயரமானதும், கொம்புகள் உடையதுமாகிய எருமைக்கடாவில் ஏறி அதைவிரட்டியும் அதட்டியும் வந்து, முறுகியதால் வலிமையான பாசத்தைஎன்உடம்பில்வீசிப்பிடித்துக் கொல்வதால், என்உயிர் துன்புறச்செய்யும் அப்பெருந்துன்பத்தை நான் அடைலாமோ? அத்துன்பம் அடையாது காத்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : நீலப்பொருப்பின் - இன் - உவமஉருபு. அடியேனை ஆள ...... தலத்தில் இருக்கும் என்றது தற்குறிப்பேற்றவணி

13. **தையாதன தானன தானன**
**தையாதன தானன தானன**
**தையாதன தானன தானன - தனதான**

நெல்வால்அள வாகிலும் ஓர்பொருள்
செய்வார்இலை யேஎன பாவம்என்
நிர்வாகமும் நீஅறி வாய்சிறி(து) - அருள்பாராய்
இல்வாழ்வைவி டா(து)அலை வேன்வினை
பொல்லாதது வே(று)அவ காசமும்
இல்லாமல்ஐ யோதடு மாறுவன் - வழிகாணேன்
வல்வாய்எம தூதர்அ டாவகை
சைவாகம வேதபு ராணமும்
வல்லோர்மன ஆலயம் நூபுரம் - எனும்வாழ்வே
. கல்வாய்உறு தேரையும் ஓர்பொருள்
செய்யா(து)அறம் யாவையும் தான்புரி
கல்யாண மனோகர கோமள - உலகாளே.

**குறிப்புரை** : நெல்வால்= நெல்லின் முனை.. செய்வார்= உதவுவார். என= என்ன. நிர்வாகம்= வாழ்நிலை. அவகாசம்= தகுதி. வல்வாய்= அதட்டும் சொல். அடாவகை= துன்புறுத்தாவகை. சைவ ஆகமம் வல்லோர்மனம் ஆலயம்= சைவ ஆகமங்களும் ஒழுக்கத்தில் வல்லவர் மனமும் ஆலயமாகவும். வேதபுராணம் நூபுரம்= வேதங்களையும் புராணங்களையும் சிலம்பாகவும். ஓர்பொருள்செய்யாது=அற்பமாய்க் கருதாமல். கல்யாண மனோகர கோமள= மங்கலம் மகிழ்ச்சி அழகு ஆகியனஉடைய

**பொழிப்புரை** : அதட்டும் சொற்களைப்பேசும் எமதூதர் என்னைத்துன்புறுத்தாதவகையில், சைவ ஆகமம், ஒழுக்கத்தில் வல்லவர்மனம் ஆகியவற்றை ஆலயமாகவும், வேதம் புராணம் ஆகியவற்றைச் சிலம்பாகவும் கொண்ட என்வாழ்வுபொருளே! கல்லுக்குள் உள்ள தேரையையும் அற்பமாகக் கருதாமல் அறங்கள் அனைத்தையும் தான்ஒருத்தியே செய்யும் மங்கலம் மகிழ்ச்சி அழகு ஆகியனவுடைய / அருளும் அருள்தரு உலகம்மையே!

நான் இல்லறத்தினைக் கைவிடாது அலைகின்றேன், வேறு தகுதியும் எனக்கு இல்லை.ஊழ்வினை பொல்லாதது. ஐயோ! தடுமாறுகிறேன். தடுமாற்றம் தீர்க்கும் வழியொன்றும் காணேன். நெல்லின்முனை அளவாவது உதவுவார் இல்லை. நான் செய்தபாவம் என்ன! என்வாழ்நிலையை நீஅறிவாய்! அருட்கண் சிறிதுநோக்கியருள்க.

**விளக்கம்** : அம்மை அறம்யாவையும் புரிகிறவள் :

" கண்ணகல் ஞாலத்து எண்ணில்பல் கோடிப்
பிள்ளைகள் பெற்றஅப் பெருமனைக் கிழத்திக்கு
நெல்இரு நாழி நிறையக் கொடுத்து ஆங்கு
எண்நான்கு அறமும் இயற்றுதி நீஎன " ( சிதம்பரமும்மணிகோவை 14: 18- 21)

" நல்வாய்மை அறம்வளர்க்கும் வித்தாநெல் இருநாழி தருகேம் அந்த
.நெல்லாலே இகபரத்தும் உயிர்ப்பைங்கூழ் தழைகஎன நிறுவல் செய்தார்."
( காஞ்சிப்புராணம். தழுவக்குழைந்தபடலம் 426 )

அம்மைக்கு வேதம் சிலம்பணியாகும்:

" ஆர நூபுரம் சிலம்பும் அடிகள் போற்றி " ( அங்கயற்கண்ணம்மை ........)

14. **தனன தானன தந்தன தந்தன**
**தனன தானன தந்தன தந்தன**
**தனன தானன தந்தன தந்தன - தனதான**

உறவை மாதரை மைந்தரை நண்பரை
மனையை வாழ்வை மகிழ்ந்துப் ரபஞ்சம்இ(து)
உறுதி யாம்என வம்பினில் நம்பினேன் - அறியாதே
இறுதிக் காலம் வரும்பொழு(து) இங்(கு)இவர்
வருவர் ஆர்உடன் என்றுநி னைந்திலன்
இதென்ன பாதகம் இவ்அகப் ப்ரேமை - ஒழியாதோ
சறுவ லோகப யங்கரி சங்கரி
சறுவ தேவநி ரந்தரி அந்தரி
சறுவ பூதது ரந்தரி சுந்தரி - மகமாயி
மறைப ராவிய மந்த்ரசு மங்கள
சொருப ஸ்பநவம் உணர்ந்தவர் சிந்தையும்
மலய பூதர மும்குடி கொண்டஎன் - உலகாளே.

**குறிப்புரை** : உறுதியாம்= நிலையானவை. வம்பினில்= வீணாக. இறுதிக்காலம்= இறக்கும்போது. பிரேமை= மயக்கம். சறுவலோகம் - சர்வலோகம்= அனைத்துஅண்டம். பயங்கரி= அஞ்சச்செய்பவள்.சங்கரி= நன்மைசெய்கிறவள். நிரந்தரி= நெருக்கமாய் இருப்பவள். அந்தரி= சொந்தமானவள். பூததுரந்தரி= ஐந்து பூதங்களைக்காட்டிலும் வல்லமையுடையவள். ஸ்பநவம்= நிலை. மலைபூதரம்= பொதிகைமலை.

**பொழிப்புரை** : அனைத்து உலகங்களையும் அஞ்சச்செய்பவள், அனைத்து உலகங்களுக்கும் நன்மை செய்பவள், அனைத்துத் தேவர்களுடனும் நெருக்கமானவள், அனைத்தையும் உடைமையாகக் கொண்டவள், ஐம்பூதங்களைவிட வல்லமையுடையவள், அழகி, பெருந்தாய் என்றும், வேதமந்திரம் போற்றும், சுமங்களமான ஞானநிலையினள் என்றும் இவளைஉணர்ந்து போற்றும் அடியவர்உள்ளத்திலும், பொதிகை மலையிலும் குடிகொண்ட அருள்தரு உலகம்மையே!

உறவினரை, பெண்டிரை, மைந்தரை, நண்பரை, மனைவியை, தன்வாழ்வை எண்ணி மகிழ்ந்து; இவ்வுலகம்நிலையானது என்று மயங்கி, நிலையாதன என்ற உண்மையறியாமல் வீணாக நம்பினேன். நான் இறக்கும் காலத்தில் இவர்களில் உடன்வருகிறவர் யாரென்று நினைக்கவில்லை. இறக்கும்போது உடன்வருவர் இவர்என்ற என்மனமயக்கம் தீராதா? தீர்த்தருள்க.

**விளக்கம்** : இறக்கும் போதுஉடன் வருவார்யாருமில்லை :

" அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீடுமட் டேஇரு கைதலைமேல்
வைத்தழும் மைந்தரும் சுடுகாடு மட்டே நமைப்
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே "

இக்கருத்தைக் கவிஞர் கண்ணதாசன்,

" வீடுவரை உறவு வீதிவரை மனைவி
காடுவரை பிள்ளை கடைசிவரை யாரோ "

என்று எளிமைப்படுத்திக் கூறுவார்.

15. **தானான தானன தனத்ததன தானதன**
**தானான தானன தனத்ததன தானதன**
**தானான தானன தனத்ததன தானதன - தனதான**

வாலாய மாய்உனை வழுத்துகிலன் ஓடிஎம
தூதாளும் ஓலையும் அழைக்கவரி லோசிறிது
மாகாணி நாழிகை தரிக்கவச மோபிசக - விடுவாரோ
காலாற நீழல்ஒரு சற்றுமிலை யாம்வழியி
லேகீழும் மேலிலும் நெருப்(பு)எரியு மாம்அடிமை
கால்பாவு மோஅது கடத்திஎம லோகமிசை - கொடுபோனால்
நாலேழு கோடிந ரகத்(து)எறி வரேசிறிது
தேவானு கூலம்இ னிஎப்படி அமேஅடிய

னாலேசுமா அநுபவித்து முடியாதுதிரு - அருள்தாராய்
ஆலால போசனர் அகத்யமுனி பூசனைசெய்(து)
ஏகாக மாகஒரு செட்டிவினை தீரஅருள்
வார்**பாப நாசர்புணர் நித்யகலி யாணி**எனும் - உலகாளே.

**குறிப்புரை** : வாலாயம்= வழக்கம். மாகாணி நாழிகை= ஒருநாழிகையில் பதினாறில் ஒருகூறு.= ஒன்றரை நிமிடம். தரிக்க= உயிருடன்வாழ. பிசக விடுவாரொ= தவறு நேர விடமாட்டார். அது கடத்தி= அதைவிட்டு. தேவானுகூலம்= திருவருள் நலம். அமே= அம்மையே. சுமா= அடிக்கடி. ஆலால போசனர்= நஞ்சுண்ட சிவபிரான். ஏகாகம்= இறந்தவர்க்கு பதினோராம் நாளில் செய்யும் சடங்கு. பாபநாசர்= விக்ரமசிங்கபுரத்து இறைவர். நித்யகலியாணி= உலகம்மையின் மற்றொரு திருபெயர்.

**பொழிப்புரை** : நஞ்சுண்ட சிவபிரானை அகத்தியமுனிவர் வழிபாடுசெய்து, ஒருசெட்டி இறந்தபோது அவனுக்குச்செய்யும் பதினோராம் நாள்சடங்கில் அவனது ஊழ்வினைதீருமாறு அருளிய சிவபிரானாகிய அருள்தரு பாவநாசருடன் கூடிவாழும் அருள்தரு நித்தியகல்யாணி என்றும் திருப்பெயருடைய உலகம்மையே!

வழக்கமாக உன்னைநான் வணங்கவில்லை; எமதூதர் ஓலையுடன் ஓடிவந்து என்னை அழைத்தால், சிறுநேரமாகிய ஒன்றரை - மணித்துளி - நிமிடம்கூட உயிருடன் வாழமுடியுமா? நேரம்தவற விடுவாரோ. காலாற நிற்பதற்குச் சிறிதளவும் நிழலில்லாது, மேலும்கீழும் நெருப்புஎரியும் அந்த நரகவழியில் உன்அடிமையாகிய நான் நடக்க முடியுமா? அதைவிட்டு எமன்உலகிற்குக் கொண்டுபோனால் இருபத்துஎட்டு வகைப்பட்ட நரகத்தில் என்னை எறிவர். சிறிதளவாது திருவருள் கிடைக்குமா? தாயே! அடியேனால் அத்துன்பத்தை அடிக்கடி - பிறப்புகள் தோறும் - அனுபவிக்க முடியாது. உன் திருவருளை வழங்கியருள்க.

**விளக்கம்** : காலம் தவறாதவன் என்பதால் வந்த காலன் என்றபெயர் காரணப்பெயர். செட்டியின் ஊழ்வினை தீர்த்தசெய்தி தலபுராணச்செய்தியாகும். 28 வகை நரகங்கள் பற்றித் " தேவிபாகவதபுராணநூல் " மூலம்அறிக. இங்குள்ள இறைவனை; பாவநாசர், கல்யாண சுந்தரர் என்றும்; இறைவியை உலகம்மை , கல்யாணசுந்தரி என்றும் வழங்குவர்,

**இலக்கணக்குறிப்பு** : நீழல் - முதல் நீண்டசெய்யுள்விகாரம். நாலேழு கோடி - தொகைக்குறிப்பு. சுமா, அமே= இடைக்குறைகள்.

திருச்சிற்றம்பலம்